# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

•Volume : 3 • Issue: 8 • October 2016 • Annual Subscription Rs. 100/- • மலர் 3 • இதழ்: 8 • அக்டோபர் 2016 • வருடச் சந்தா ரூ. 100/-




குருவும் ஞானியும்

**Master and Enlightened one**

# பகவத் பாதை
தமிழ் மாத இதழ்

## உள்ளே







ஞானம் பெறுவது என்பது மனித வாழ்வின் இலக்கு. ஒருவர் ஞானம் அடைந்தது மற்றவர்களுக்குத் தெரியாமல் கூட இருக்கலாம். ஆனால் அவரைப் பொறுத்த வரையில் அதுதான் உயர்ந்தநிலை. ஆனால் குருவை பலருக்கும் தெரியும்; அவரைச் சுற்றி பெரிய கூட்டங்கள் இருக்கும். ஆனால் அவர் ஞானம் அடைந்திருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

நாம் ஞானியாக இருந்தால் மட்டும் போதும்; குருவாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

- ஸ்ரீ பகவத்



## நெரூரில் 3 நாள்
# ஞான முகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : **காஞ்சி சங்கர மட வளாகம், நெரூர் அக்ரஹாரம்.**

நாள் : 25.11.2016 வெள்ளிக்கிழமை மாலை 6:00 மணி முதல் 27.11.2016 ஞாயிற்றுக்கிழமை மாலை 3.00 மணி வரை

ஞான முகாம் கரூரில் இருந்து திருமுக்கூடலூர் செல்லும் வழியில் இருக்கும் காவேரி ஆற்றங்கரையில் அமைந்துள்ள ஆன்மிகத்தில் சிறப்பு வாய்ந்த இடமான ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரரின் ஜீவ சமாதி வளாகத்திற்கு அருகில் நெரூர் அக்ரஹாரத்தில் அமைந்துள்ள காஞ்சி கங்கர மடத்தில் நடைபெற உள்ளது.

தலைப்புகள் :

**ஞானத் தெளிவு | அகம் புறம் | நான் யார்?**
**நினைவும் சிந்தனையும் | மனோலயம் - மனோ நாசம்**
**கர்ம வினைகள் | ஞானத் தெளிவில் உறுதி**

தங்குமிடம், உணவுக்கான செலவு பகிர்வு நபர் ஒருவருக்கு ரூ. 1000/-

25.11.2016 அன்று அனைவருக்கும் இரவு உணவு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இரவு உணவுக்குப்பின் அறிமுக வகுப்போடு ஞானமுகாம் ஆரம்பிக்கப்பட உள்ளது.

ஆண்கள் தங்குவதற்கும், பெண்கள் தங்குவதற்கும் தனித்தனி இடவசதி உள்ளன.

நமது ஞானமுகாம் எந்த ஆன்மிக அமைப்போடும் முரண்பாடு கொண்டதன்று, எனவே எந்த ஆன்மிக அமைப்பைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் ஞானத்தேடுதல் கொண்டவர்களாக இருப்பின் இந்த ஞானமுகாமில் கலந்து கொண்டு ஞானத் தெளிவு பெறலாம்.

வழி : கரூரிலிருந்து திருக்கூடலூர் செல்லும் பேருந்தில் பரிசல் துறை என்கிற சதாசிவன் கோயில் பஸ் நிறுத்தத்தில் இறங்க வேண்டும். பஸ்நெ.4 மற்றும் மினிபஸ் வசதி உள்ளது.

கரூர் இரயில் நிலையத்தில் இறங்குபவர்கள் பக்கத்தில் மார்கெட் ஸ்டாப் வரை நடந்து சென்று ஞானமுகாமிற்கு வரலாம்.

ஞானமுகாமில் கலந்துகொள்பவர்கள் பெயரை முன்பதிவு அவசியம்.

முன்பதிவுக்கு

திரு. **இராஜகோபால்** 93605 79181
திரு. **சிவகுரு** 94437 56296
திரு. **சுவாமிநாதன்** 99422 89420
திரு. **பாலசுப்ரமணியம்** 97872 53751

அனைவரும் வருக! தெளிவு பெறுக!!

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?


Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This Book Designed By:
**PRAKASH PRINTERS, SALEM**
Mobile : 9843786655



# குருவும் ஞானியும்
## Master and Enlightened one

தனிப்பட்ட முறையில் என்னைச் சந்திக்க வேண்டும் என்று அவர் வேண்டுகோள் விடுத்து, குறிப்பிட்ட நேரத்தில் அவர் சந்திக்க வந்தார்.

அவர் தனது கேள்விகளை ஆரம்பித்தார்.

"என்னைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்? இதே கேள்வியை நான் உங்களிடம் திருவண்ணாமலையில் நாம் சந்திக்கும் போதும் கேட்டேன். அதற்கு நீங்கள் சரியான பதில் கூறவில்லை...

"நான் கல்லூரியில் படிக்கும் காலத்திலேயே ஆன்மிக நூல்கள் பலவற்றைப் படிப்பேன். உலகத்தை ஏதோ ஒரு சக்தி இயக்குகிறது என்றும், நாம் அதன் கருவியாக இருந்து செயல்படுகிறோம் என்றும் எனக்கு ஒரு விளக்கம் ஏற்பட்டது. அது முதல் எனக்கு வித்தியாசமான அனுபவங்கள் ஏற்பட ஆரம்பித்தன. அடிக்கடி ஒரு விதமான பரவச நிலை ஏற்பட ஆரம்பித்தது. வாழ்க்கையை சிரமம் இல்லாமல் மகிழ்ச்சியுடன் எதிர்கொள்ளும் வல்லமை ஏற்பட்டது."

"ஒருவரைப் பார்த்து அவர் ஞானிதானா இல்லையா என்பதை உங்களால் கண்டுபிடிக்க முடியுமா?"

– அவருடைய கேள்விகள் இவ்வாறு அமைந்திருந்தன.

அவருடைய கேள்விக்கு பதில் கொடுத்தேன்.

"ஒவ்வொருவருடைய உடலைச் சுற்றியும் "ஆரா" என்னும் ஒளிவட்டம் காணப்படுவதாக யோக சாஸ்திரங்கள் கூறுகின்றன. அந்த ஒளிவட்டத்தைக் கண்டறியும் ஆற்றல் சிலருக்கு ஏற்படுகிறது...

"ஆனால் அந்த **ஒளிவட்டத்துக்கும் ஞானத்துக்கும் சம்பந்தம் கிடையாது. அது யோக சாதனைகள் சம்பந்தப்பட்டது. ஒருவர் தன்னுடைய அக அனுபவங்களோடு முரண்பாடு கொண்டுள்ளாரா அல்லது முரண்பாடு இல்லாமல் இருக்கிறாரா என்பது தான் ஞானியின் அடையாளம்.** ஞானி ஒருவர்தான் தன்னை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்வார். இத்தகைய நிலையில் ஒருவர் உள்ளாரா இல்லையா என்பதை அவரிடம் உரையாடிதான் தெரிந்து கொள்ள முடியும். நீங்கள் உங்களுக்குள்ளே முரண்படாதிருந்தால் நீங்களும் ஞானிதான்."

இப்படி பொதுப்படையாகப் பதில் கொடுத்தது அவருக்கு போதிய திருப்தியை அளிக்கவில்லை.

"நீங்கள் ஞானமடைந்து விட்டீர்கள்" என்று நேரடியாக அவரிடம் கூற வேண்டும் என்பதை அவர் எதிர்பார்த்தார்.

நானும் அவரை நிராகரிக்கவில்லை. "நீங்கள் தெளிவடைந்து விட்டதாக உங்களுக்குத் தோன்றினால் நீங்கள் அதனை உங்கள் நண்பர்களுடன் பகிர்ந்து கொள்ளலாமே" என்று கேட்டேன்.

"எனது நண்பர்கள் பெரும்பாலும் ஜே.கிருஷ்ணமூர்த்தியின் கருத்துகளில் ஈடுபாடு கொண்டவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் எவரும் என்னுடைய கருத்துகளை ஏற்றுக் கொள்ள மறுக்கிறார்கள்...

"கிருஷ்ணமூர்த்தி, "நான்" என்பதே இருக்கக்கூடாது என்கிறார். அது அவருடைய ஈகோவாக அமைந்து விட்டது. நீங்கள் அகம் புறம் என்று பிரித்து விளக்கம் கொடுக்கிறீர்கள். அது உங்களுடைய ஈகோவாக உள்ளது."

– இவ்வாறு அவர் கூறி முடித்தார். அதன் பிறகு அவர் விடை பெற்றுச் சென்று விட்டார்.

அவர் விடைப் பெற்றுச் சென்றாலும் அவருடைய உண்மையான பிரச்சினை – எதிர்பார்ப்பு என்னவென்பது எனக்குப் புரியவில்லை. மறுநாள் தான் அவருடைய பிரச்சினை என்ன என்பது எனக்குப் புரிய ஆரம்பித்தது.

அவர் ஒரு சராசரி மனிதரல்லர். அவர் ஒரு கணினிப் பொறியாளர். வெளிநாடுகளில் பணியாற்றித் திரும்பியவர். பல அனுபவங்களைப் பெற்றவர். அதனால் அவரது பிரச்சினையை ஏனோ தானோ வென்று

அணுகக் கூடாது.

இந்த சந்தர்ப்பத்தில் தான் நாம் குருவுக்கும், ஞானிக்கும் உள்ள வித்தியாசத்தைப் புரிந்து கொள்ள வேண்டிய நிலையில் உள்ளோம்.

நமது நூல்களைப் படித்தவர்கள், கூட்டங்கள் மற்றும் முகாம்களில் கலந்து கொண்டவர்கள் அனைவருமே தங்களது பிரச்சினைகள் அனைத்திலிருந்தும் விடுபட்டு விடுகிறார்கள். அவர்களுடைய பிரச்சினைகள் அவர்களை முன்புபோல் பாதிப்பதில்லை. அதனால் அவர்கள் அனைவருமே ஞானம் பெற்றுவிட்டதுதான் உண்மை. ஞானம் பெற்ற நிலையில் தான் அவர்களால் இப்படித் தங்களுடைய பிரச்சினைகளிலிருந்து விடுபட முடியும். ஆனாலுங்கூட பலர், தாங்கள் ஞானமடைந்துவிட்டதை உறுதிப்படுத்திக் கொள்ள முடியாமல் இருக்கிறார்கள்.

"ஞானமடைந்து விட்டால் எதிர்மறையான உணர்ச்சிகளே ஏற்படாது" என்ற ஒரு கோட்பாடு மனதில் ஆழமாக வேரூன்றியுள்ளது. அதனால்,

பிரச்சினையான உணர்ச்சிகளிலிருந்து சுலபமாக விடுபட முடிந்ததைக்கூட அவர்கள் பெரிதாகக் கருதுவதில்லை.

சிலர் என்னிடம் இப்படிக் கேட்கிறார்கள்:

"நீங்கள் எதுவும் செய்யாமல் சும்மா இருக்கும் போது எங்களைப் போன்று உங்களுக்கும் ஏதேதோ சிந்தனைகள் ஏற்படுமா?"

ஞானமடைந்தவர்கள் அனைவரும் ஏதோ ஒரு வினோதமான நிலைக்குப் போய்விடுவதாக எண்ணி விடுகிறார்கள்.

யோக சாதனைகள் மூலம், சிந்தனைகளே எழும்பாமல் மனதைக் கட்டிப்போட்டுவிடலாம். ஆனால் அதற்கும் ஞானத்துக்கும் – விடுதலைக்கும் சம்பந்தமில்லை.

இதைப் போன்று தான் ஞானிக்கும், குருவுக்கும் உள்ள வித்தியாசத்தை, பலரும் அறியாதிருக்கிறார்கள்.

என்னுடைய ஆரம்ப கால தேடுதல்களின் போது இராமகிருஷ்ணருடைய வாழ்க்கை மற்றும் உபதேசங்களே முக்கியத்துவம் பெற்றிருந்தன.

அவர் இப்படிக் கூறுவார்:

"ஒரு மலர் மலர்ந்து விட்டால் தேனீக்களையும், வண்டுகளையும் கூட்டிச் சென்று மலர்களில் விட வேண்டியதில்லை. அவை தாமாகவே வந்து விடும். அது போல் ஒருவர் ஞானம் பெற்று விட்டால் சீடர்களைக் கூப்பிடவேண்டாம். பக்தர்களும், சீடர்களும் தாமாக அவரைச் சுற்றிக் கூடிவிடுவார்கள்."

– இது அவரது கூற்று.

அப்படி தான் நானும் நினைத்து வந்தேன்.

அது உண்மை இல்லை என்பதைப் பிறகு தான் தெரிந்து கொண்டேன். எந்த ஞானத்தை அடைய வேண்டும் என்று அரும்பாடு பட்டேனோ அதை நான் அடைந்த நிலையில் எவருமே அதனைக் கண்டு கொள்வதாக இல்லை.

தெரியாதவர்களைக் கூட விட்டு விடலாம். என்னுடன் நெருங்கிப் பழகிய ஆன்மிக நண்பர்கள் கூட என்னைக் கண்டு கொள்ளவில்லை. அற்புதங்கள் எதையாவது செய்து காட்டினால் கூட்டம் கூடிவிடும். ஆனால் அதற்கும் ஞானத்துக்கும் தொடர்பு கிடையாது.

இராமகிருஷ்ணரைச் சுற்றி பக்தர்கள் கூடிவிட்டார்கள். இது போல் புத்தர், இரமணர், ஜே.கிருஷ்ணமூர்த்தி இவர்களை சுற்றியும் பலர் சேர்ந்துவிட்டனர்.

தற்போது என்னைச் சுற்றிக் கூட ஒரு கூட்டம் உருவாகி வருகின்றது.

இப்படி எவரைச் சுற்றியெல்லாம் கூட்டம் உருவாகியுள்ளதோ அவர் தான் ஞானியா?

அவர்தான் மலர்ந்து மணம் வீசுகின்றாரா?

நான் எனது குருநாதர்களுள் ஒருவராக குறிப்பிடும் தேனி சுவாமிகள் தான் 16 வயதில் ஞானம் பெற்றதாகக் கூறுகிறார்.

நான் அவரைச் சந்திக்கும் காலத்தில் அவருக்கு 60 வயதுக்கு மேல் இருக்கும்.

அவரைப் பார்க்க அவருடைய ஊருக்குப் போயிருந்தேன். அவருடைய வீட்டை விசாரித்தால் எவருக்குமே அவரைத் தெரியவில்லை.

அவரைத் தெரிந்தவர்களுக்குக் கூட ஒரு ஞானி என்பது தெரிந்திருக்கவில்லை.

பிரபல்யம் அடைந்தால் மட்டுந்தான் ஒருவர் ஞானியாக இருக்க முடியுமா?

ஞானிகளாக இருப்பவர்கள் பிரபல்யம் அடைய வேண்டுவது இல்லை.

குரு – Master என்பவர் போதனை செய்பவர்.

போதனைகள்தான் ஒருவரை பிரபலப்படுத்துகிறதே அல்லாமல் ஞானம் பிரபலப்படுத்துவதில்லை.

பிரபலமடைந்த ஞானிகளைப் பார்த்தால் அவர்களுடைய போதனைகள் அனைத்தும் சிறப்பானதாக இருக்கும். பலரை வசீகரிப்பதாகவும் இருக்கும்.

நம்முடன் நெருங்கிப் பழகும் சிலர் இப்படிக் கேட்டனர்.

"அய்யா உங்களை மாதிரி ஆவதுதான் எங்களது ஆசை. உங்களை மாதிரி நாங்கள் எப்போது ஞானி ஆவோம்?"

இவர்களும், ஞானிக்கும் குருவுக்கும் வித்தியாசம் தெரியாமல் தான் இவ்வாறு கேட்டு விட்டார்கள்.

நமது கருத்துகளினால் பயனடைந்த ஒருவர் வங்கி அதிகாரியாக உள்ளார்.

காலையிலிருந்து மாலை வரை அமைதியாக வேலை பார்ப்பார். எந்தப் பிரச்சினையும் இருக்காது.

மாலையில் அவர் எல்லாக் கணக்குகளையும் முடித்து நேர் செய்ய வேண்டும்.

ஆனால் நேர் செய்ய முடியாமல் தவிப்பார். தலையே வெடித்து விடும் போலிருக்கும்.

அவருடைய நிலையைப் பார்த்து மற்றவர்களும் பரிதாபப்படுவர்.

நமது கருத்துக்களால் பெற்ற தெளிவு அவரை மாற்றி விட்டது.

கணக்குகளை எளிதாகக் கையாண்டார். கணக்குகளில் எப்போதும் போல் சிக்கல்கள் ஏற்படத்தான் செய்தன. ஆனால் அவருடைய அணுகுமுறை தான் மாறி விட்டது.

அவரை அறிந்த அலுவலகத்தில் உள்ள அனைவரும் அவரது மாற்றத்தைக் கண்டு ஆச்சரியமடைந்தனர்.

தான் அடைந்த தெளிவை மற்றவர்களுக்கும் விளக்கிப் பார்த்தார். எவருக்கும் அது எட்டவில்லை. அதனால் அவர் தனது போதனையை நிறுத்திக் கொண்டார்.

அவர் அடைந்த தெளிவு – ஞானம் உண்மையானது. அவருக்கு ஏற்பட்ட மாற்றம் உண்மையானது.

அவர் ஞானமடைந்து விட்டார் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை.

ஆனால் குருவாகும் முயற்சியில் மட்டும் தோல்வியடைந்து விட்டார்.

இப்போது ஒரு கேள்வி.

ஒருவர் ஞானியாவது முக்கியமா?

அல்லது குருவாக ஆவது முக்கியமா?

ஞானியாவது என்பது மனித வாழ்வின் இலக்கு. அவர் ஞானம் அடைந்தது மற்றவர்களுக்குத் தெரியாமல் கூட இருக்கலாம். ஆனால் அவரைப் பொறுத்த வரையிலும் அதுதான் உயர்ந்தநிலை.

– அடைய வேண்டிய நிலை.

ஆனால் குரு அப்படி அல்ல. அவரை பலருக்கும் தெரியும்; அவரைச் சுற்றி பெரிய கூட்டங்கள் இருக்கும்; அவரை தெய்வமாகக் கூட வழிபடலாம்.

அதே கேள்வியை மீண்டும் கேட்போம்.

ஞானி உயர்ந்தவரா?

அல்லது குரு உயர்ந்தவரா?

இந்தக் கேள்விகளுக்கான பதிலைக் காணுவதற்கு முன்னால் இன்னுமொரு விபரத்தையும் நாம் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும்.

அதைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும் பட்சத்தில் இந்தக் கேள்விக்கான பதிலை நீங்களே கண்டு பிடித்து விடுவீர்கள்.

அது என்ன விபரம்?

அழகாகவும், திறமையாகவும் விளங்கும் படியாகவும், சுவாரஸ்யமாகவும் பேசி விளக்கம் கொடுப்பவர்களும், அதன் மூலம் கூட்டங்களைச் சேர்த்திருப்பவர்களும்

ஞானம் அடைந்திருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

ஞானமடையாத எத்தனையோ நபர்கள் பிரபலமடைந்துள்ளார்கள்.

அப்படிப் பார்க்கும் போது, குருவாக இருப்பவர்களை விடவும் ஞானிகளே உயர்ந்தவர்கள். பல்லாயிரம் மடங்கு மேலானவர்கள்.

ஒரு செய்தியை அடுத்தவர்களுக்கு சுவாரஸ்யமாக எடுத்துக் கூறி விளங்க வைக்கும் திறமை சிலருக்கு இயல்பாகவே அமைந்துள்ளது.

அது ஞானிகளுக்கு மட்டுமே இருக்கும் திறமையல்ல.

அத்தகைய திறமை அதிர்ஷ்டவசமாக சில ஞானிகளுக்கும் அமைந்து விடுகின்றது.

அவர் ஞானியாகவும் இருக்கிறார்; குருவாகவும் இருக்கிறார்.

ஆனால் குருவாக இருந்தால் மட்டுமே ஒருவர் ஞானியாக இருக்க முடியும் என்ற எண்ணந்தான் தவறானது.

குருவாக ஆகாத காரணத்தினால், தான் ஞானி இல்லையோ என்ற சந்தேகம் ஒருவருக்கு ஏற்படத் தேவையில்லை.

ஞானியாக மட்டும் உள்ளவர்கள் தங்கள் மனதில் தோன்றியதை அப்படியே வார்த்தைகளாக்கிக் கொட்டிவிடலாம்.

ஆனால் குருவாகச் செயல்படுபவர்கள் தங்களது வார்த்தைகளை ஒழுங்குபடுத்திதான் வெளியிட வேண்டும்.

நம்மைச் சந்தித்த அந்த அன்பரின் வார்த்தைப் பிரயோகங்களைப் பார்த்தால் அது உங்களுக்கே புரியும்.

அவர் தனது உரையாடலின் போது, "நான் என்பதே இருக்கக் கூடாது என்பது ஜே.கிருஷ்ணமூர்த்தியின் ஈகோ. அகம் – புறம் எனப் பிரித்து விளக்கம் கொடுப்பது உங்களுடைய ஈகோ" என்று குறிப்பிட்டார்.

அவர் மனதில் என்ன தோன்றியதோ அதனை வார்த்தையாக்கி வெளிப்படுத்தியுள்ளார்.

ஈகோ என்பதனை அவர் என்ன பொருளில் கூறினார் என்பது நமக்குத் தெரியாது. அது பற்றி அவர் விளக்கவில்லை. நாமும் விளக்கம் கேட்கவில்லை.

மேலோட்டமாகப் பார்த்தால் ஈகோ என்றால் அகங்காரம் அல்லது ஆணவம் என்றே பொருள் கொள்ளப்படும். ஆகவே அது ஒரு குற்றச்சாட்டைப் போலவே அமைந்திருந்தது.

ஞானிகள் எப்படி வேண்டுமானாலும் பேசலாம். ஆனால் குருவாக இருப்பவர்கள் இத்தகைய சொற்களைக் கைவிட வேண்டும். ஊக்கம் தரும் சொற்களையே பிரயோகிக்க வேண்டும்.

இங்கு பயணந்தான் முக்கியம்.

நாம் பஸ்ஸில் பயணியாக இருந்து கொண்டும் பயணிக்கலாம்; டிரைவராக இருந்து கொண்டும் பயணிக்கலாம். டிரைவராக இருந்தால் தான் பயணிக்க முடியும் என்ற எண்ணத்தை மட்டும் கைவிட்டால் போதும்.

**நாம் ஞானியாக இருந்தால் மட்டும் போதும்; குருவாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.**





# கேள்வி? பதில்...

## எண்ணம் வருகிறதா? போகிறதா?

V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

**கேள்வி**

பகவத் ஐயாவின் புரிதலினால் ஓரளவிற்கு நிறைவாக வாழ்ந்து வருகிறேன். இருந்த போதும் சில சந்தர்பங்களில் மனம் பாதிப்படையும் வகையில் எண்ணங்கள், பயம், தோல்வி, தாழ்வு மனப்பான்மை, குற்ற உணர்ச்சி போன்றவை எனக்கு வந்துகொண்டே தான் இருக்கிறது. அதனால் ஏற்படும் மன அழுத்தத்திலிருந்து மீள முடியவில்லை. சில நேரங்களில் எவ்வளவு தான் புரிதல் இருந்தும் இப்படி இருக்கிறதே என்று எண்ணத் தோன்றுகிறது. தாமாக எண்ணம் தோன்றுகிறது என்பது தெரிந்தாலும் கூட செயல் என்று வரும் போது என்னை பாதிக்கவே செய்கிறது. எண்ணங்களை எதிர்க்க வேண்டாம், அதன் பின்னால் செல்ல வேண்டாம், அதை பற்றி சிந்திக்க வேண்டாம் என்பது எல்லாம் தெரிகிறது. ஆனால் செயல் என்று வருகிற போது பாதிப்புகள் ஏற்படத் தான் செய்கிறது. அதை எப்படி எதிர் கொள்வது?

**பதில் :**

எண்ணம் என்றால் என்ன என்பதை நாம் தெளிவாக நமக்கு புரியும் படி விளங்கி கொண்டால் இந்த எண்ணத்தை எதிர்த்து செயல்பட மாட்டோம். எண்ணத்தின் வெளிப்பாடு பற்றி அறிவியல் ரீதியான புரிதல் நமக்கு ஏற்படும் போது எண்ணத்தோடு முரண்படுவதிலிருந்து விடுதலை அடைந்து விடுவோம். எண்ணம் நமது செயலை முடக்கி போடாத நிலைக்கு நாம் உயர்ந்து விடுவோம்.

எண்ணம் என்பது நமது மனதில் பதிந்து இருந்த ஒன்று நாம் சந்திக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப நமது மனதிலிருந்து வெளிப்பட்டு நம்மை விட்டு விடுதலை அடையும் நிகழ்வே ஆகும். ஏற்கனவே நம் மனதில் பதிந்த நினைவு மனதிலிருந்து வெளிப்பட்டு நம்மை விட்டு விடுதலையாவதை தான் நாம் எண்ணமாக உணர்கிறோம். இப்படி நமது மனதில் பதிந்திருந்தவை வெளியேறுவதை தான் எண்ணம், பயம், கவலை, வெறுப்பு, குற்ற உணர்வு, தாழ்வு மனப்பான்மை என பல பெயரிட்டு அழைக்கிறோம், அதாவது மனதில் பதிந்திருந்த ஒன்று நமது நினைவுக்கு தெரிந்து நம்மை விட்டு விடுதலையாகி வெளியேறுவதை தான் நாம் எண்ணமாக உணர்கிறோம்.

மனதில் பதிந்திருந்த ஒன்று நம்மை விட்டு வெளியேறி விடுதலை அடைகிறது என்றால் அதற்காக, நாம் மகிழ்ச்சி தான் அடைய வேண்டும், நமது இருப்பிலிருந்து ஒன்று வெளியேறி இருக்கிறது என்பது தான் அர்த்தம். ஆனால் நாம் நமக்கு வெளிப்படும் எண்ணத்தை கண்டு நமக்கு பயம், வெறுப்பு, கவலை, குற்ற உணர்வு, தாழ்வு மனப்பான்மை இப்படி ஏதோ ஒன்று ஏற்பட்டதாக எண்ணிக் கொள்கிறோம்.

உண்மையில் மனதில் பதிந்திருந்த ஒன்று நம்மை விட்டு வெளியேறுவதை தான் நமக்கு புதியதாக ஏற்படுவதாக தவறாக புரிந்து கொள்கிறோம். மனதின் வெளியேற்றத்தை நாம் மனம் புதியதாக கொண்டு வருவதாக எண்ணிக் கொள்கிறோம்.

பொதுவாக இயற்கை எல்லாவற்றையும், எப்போதும் சமநிலைப்படுத்துவதையே (Equilibrium) இயற்கை நியதியாக கொண்டு இருக்கிறது. உதாரணமாக ஒரு கண்ணாடிப் பாத்திரத்தில் தண்ணீர் நிரம்பி இருக்கிறது. தண்ணீர் அசைவற்று, சலனமற்று இருக்கிறது. ஒரு சிறு நீர்துளி கண்ணாடி பாத்திரத்தில் அசைவற்று இருக்கும் தண்ணீரின் மீது விழுகிறது.

உடனே தண்ணீரில் அலைகள் தோன்றுகிறது. இங்கு நாம் புரிந்து கொள்ள வேண்டிய ஒரு மிக முக்கியமான விசியம் என்னவென்றால் அலைகள் தோன்றுவது என்பது அசைவற்று இருக்கும் தண்ணீரில் மேலும் அசைவை அதிகரிக்க செய்யும் இயக்கமா? அல்லது அலைகளை ஏற்படுத்தி தண்ணீர் மீண்டும் அசைவற்ற சலனமற்ற தன்மைக்கு கொண்டு செல்லும் இயக்கமா? என்பது தான் கேள்வி.

அலைகள் தோன்றுவது என்பது நிச்சயமாக மேலும் தண்ணீரில் அசைவை அதிகரிப்பதற்கான செயல் இல்லை என்பதை மட்டும் நாம் தெளிவாக விளக்கிக் கொண்டால் போதும். கொஞ்ச நேரத்தில் அலைகள் குறைந்து, சலனம் குறைந்து தண்ணீர் அசைவற்ற தன்மைக்கு இயற்கையாக வந்து விடுகிறது. தண்ணீர் சமநிலையை அடைவதற்கு தான் அலைகள் தோன்றுகின்றனவே தவிர ஒரு போதும் இதைத் தான் தண்ணீரின் சமநிலையை குலைப்பதற்காக இல்லை என்பதை விளங்கி

கொண்டால் போதும். இதைத்தான் Equilibrium என்கிறோம். அலைகளை ஏற்படுத்தி இயற்கை தண்ணீரை சமநிலைக்கு கொண்டு வருகிறது.

உடல் கழிவுகளை வெளியேற்றி உடல் எப்படி ஆரோக்கியம் பெறுகிறதோ அப்படியே மனக்கழிவுகளை வெளியேற்றி மனமும் ஆரோக்கியம் பெறுகிறது. உடலில் எதாவது இயற்கை வாயில் வழியாக கழிவுகள் வெளியேறுகிறது என்றால் ஆரோக்கியத்திற்கான வேலையில் ஈடுபட்டுக் கொண்டு இருக்கிறது என்பது தான் பொருள். அதே போல் மனதிலும் அதிகமாக தங்கி இருக்கும் அதிகப்படியான எண்ணக் கழிவுகளை மனம் வெளியேற்றும் வேலையே அந்த அதிகப்படியான எண்ணங்களின் வெளியேற்றமும் ஆகும். மனம் அதிகப்படியான கழிவுகளை வெளியேற்றி மனச்சமநிலை அடைவதற்கு செய்யும் வேலையே இந்த அதிகப்படியான எண்ண வெளியேற்றும்.

எப்படி அலைகளை ஏற்படுத்தி தண்ணீரை அசைவற்ற தன்மைக்கு இயற்கை கொண்டு செல்லுகிறதோ அதைபோல் மனதிலுள்ள அதிகப்படியான மன அழுத்தங்களை எண்ண அலைகளாக வெளிபடுத்தி மனச் சமநிலையை ஏற்படுத்த இயற்கையின் செயலே இந்த எண்ண வெளியேற்றம் என்பதை நாம் புரிந்து கொள்ளும் போது நாம் எண்ண வெளியேற்றத்தை எதிர்க்கவோ, தடுக்கவோ, மாற்றவோ முற்பட மாட்டோம். அதிகப்படியானவற்றை சமநிலைபடுத்துவதுதான் இயற்கையின் வேலை. நமக்கு எண்ணம் வந்து கொண்டே இருக்கிறது என்ற நம்முடைய பழைய பார்வைக்கும், நம்மை விட்டு எண்ணம் போய்க் கொண்டே இருக்கிறது என்ற நமது புதிய பார்வைக்கும் 100% வித்தியாசம் இருக்கிறது. எண்ணம் வருகிறது என்பது தான் இதுவரை நாம் கற்ற அனைத்து ஆன்மிக கல்வியும், பயிற்சி, முயற்சிகளும் தெரிவிக்கின்றன. பகவத் ஐயாவின் இந்த புதிய அணுகுமுறை ஒன்று தான் எண்ணம், பயம், கோபம், வெறுப்பு, கவலை என எல்லாமே நம்மை விட்டு விடுதலையாகி போய் கொண்டு இருக்கின்றன என்பதை புரிய வைக்கிறது.

பகவத் ஐயாவின் மனதை பற்றிய இந்த புதிய பார்வையினால் நமது துன்பங்களையும், துயரங்களையும் கொடுக்கும் எண்ணங்கள் வலிமை இழந்து விடுகிறது. செயலுக்கு தேவையான எண்ணத்தை மட்டும் எடுத்து சிந்தித்து செயல்படுத்திக் கொள்ளும் தன்மைக்கு நமது மனம் இயற்கையாகவே வந்து விடுகிறது.

எண்ணத்தின் வலிமை குறைந்து விட்டால் செயலில் மாற்றம் நிச்சயம் ஏற்படும். உதாரணமாக புதியதாக மேடையில் பேசும் போது உள்ளங்கையில் வேர்த்தல், உடல் வெப்பமடைவது, மனம் மனப்பதற்றம் அடைவது போன்றவை ஏற்படும். ஆனால் பயம் என்ற எண்ணத்திற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் பேசும் போது, உடலில் வியர்த்தல், மனதில் பதற்றம் போன்றவை கொஞ்சம் கொஞ்சமாக குறைந்து பேச்சில் ஓர் நிதானமும், தெளிவும் ஏற்படும். பயம் கொஞ்சம் கொஞ்சமாக நம்மை விட்டு விலகும். காலப்போக்கில் நமது பேச்சு, மற்றவர்களுக்கு அவர்கள் நிலைக்கு புரியும் வண்ணம் எடுத்துரைக்கும் தகுதியோடும், தெளிவோடும் இருக்கும். இப்படி தான் செயலின் மாற்றத்தை ஏற்படுத்த முடியும்.

தலையாட்டி பொம்மையின் ஆட்டம் சமநிலையை நோக்கிய செயல்பாடே, அலைகளின் இயக்கம் தண்ணீரின் சமநிலையை நோக்கிய செயல்பாடே, உடல் கழிவுகளின் வெளியேற்றமும் ஆரோக்கியத்திற்கான செயல்பாடே, மனக்கழிவுகளின் வெளியேற்றமும் மனச் சமநிலைக்கான செயல்பாடே என்பதை புரிந்து கொள்வோம்.

"எண்ணம் நமக்கு வரவில்லை நம்மை விட்டு போய்க்கொண்டு இருக்கிறது என்பதை புரிந்து கொண்டால் போதும்"

★

## பெங்களூர் ஞான முகாம் தேதி மாற்றம்

சென்ற மாத இதழில் செப்டம்பர் மாதம் 17 & 18 ஆம் தேதிகளில் பெங்களூரில் ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞான முகாம் நடைபெறுவதாக அறிவித்திருந்தோம். அது தவிர்க்க முடியாத சில காரணங்களால் நடைபெற முடியாமல் போய்விட்டது.

எனவே மீண்டும் ஓரிரு மாதங்களில் ஞானமுகாம் நடத்த ஏற்பாடு செய்யவுள்ளோம். ஞானமுகாம் தேதி முடிவு செய்யபட்டவுடன் S.M.S மூலம் அறிவிக்கப்படும்.

For More Details

G.K. Babulal : 94490 35454
Sarathy : 96635 48010
www.pravaagam.org

Saravanan : 98867 47564
Rajasekar : 98869 26464
www.sribagavath.org

இவன்

Sri Bagavath Mission
Bengalore




அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்,

நமது பகவத் பாதை மாத இதழ் தொடங்கி சென்ற மாதத்தோடு ஐந்து ஆண்டுகள் நிறைவடைந்து தற்போது ஆறாம் ஆண்டில் அடி எடுத்து வைத்துள்ளோம். நமது பகவத் பாதையின் இந்த ஐந்து ஆண்டு பயணத்தில் பல உன்னதமான பணிகள் நடந்துள்ளன. பலரும் ஞானத் தெளிவு பெற்று துயரங்களிலிருந்து விடுபட்டு விடுதலை அடைந்துள்ளனர்.

நமது முதல் மாத இதழில், "நாம் எதற்காக இந்த மாத இதழை ஆரம்பித்துள்ளோம்? உண்மையைக் கூறவேண்டுமென்றால், எதற்காக இந்த இதழை ஆரம்பித்துள்ளோம் என்பதே நமக்கு தெரியாது...

"நாம் அனைவரும் ஒருவரோடு ஒருவர் உறவு கொள்ளும் வகையில் இந்த இதழ் ஆரம்பிக்கப்பட்டிருந்தாலும், பல மகத்தான பணிகளை நமது இதழ் மேற்கொள்ளப் போகிறது என்று தான் நமது உள்ளுணர்வு கூறுகிறது. அது என்ன பணி என்பதே போகப் போகத் தான் நாம் பார்க்க போகிறோம்" என குறிப்பிட்டிருந்தோம்.

அதை இப்போது கண்கூடாகப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். நாம் இதுவரை பல ஞான முகாம்கள் நடத்தியுள்ளோம். இதனால் பலர் ஞானத்தெளிவு பெற்று இயற்கையான விடுதலை இயக்கத்தில் முழுமையாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இதன் தொடர்ச்சியாக சேலம் திருவருட்சோலையில் ஜருகு மலை அடிவாரத்தில் நாம் புதியதாக கட்டப்பட்ட ஐயாவின் இல்லமான ஸ்ரீபகவத் பவன் ஆஸ்ரமத்தில் செப்டம்பர் மாதம் 10ஆம் தேதியில் இருந்து 13ஆம் தேதி வரை நான்கு நாள் ஞானமுகாம் சிறப்பாக நடத்தப்பட்டது. இதில் பல ஆன்மிக அமைப்பைச் சேர்ந்த அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைந்தனர். இயற்கையான சூழலில் ஜருகு மலை அடிவாரத்தில் நமது பகவத் பவன் ஆஸ்ரமம் அமைந்துள்ளதால் ஞானமுகாமில் கலந்து கொண்டவர்கள் பகவத் ஐயாவுடன் காலை, மாலை இரு வேளையும் Trekking சென்று வந்த அனுபவம் அவர்களுக்கு இனிமையான அனுபவமாக அமைந்ததோடு ஞானத்தை புரிந்துகொள்ள ஏதுவான சூழ்நிலையாகவும் அமைந்திருந்தது. இந்த ஞானமுகாம் கட்டணமின்றி இலவசமாக நடத்தப்பட்டது. இந்த ஞான முகாம் சிறப்பாக நடைபெற நன்கொடைகள் வழங்கிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த ஞானமுகாமில் கலந்து கொண்ட சில புதிய அன்பர்கள், "ஐயா வழங்கும் ஞானம் மிக எளிமையாகவும் புதிய அணுகுமுறையாகவும் உள்ளது. எங்கள் நண்பர்கள் பலர் ஞானத் தேடுதலோடு இருக்கிறார்கள். அவர்களுக்கும் இதை கொண்டு செல்ல வேண்டும். அதற்காக மீண்டும் ஓர் ஞான முகாம் ஏற்பாடு செய்ய முடியுமா?" என வேண்டுகோள் விடுத்தனர்.

"யாம் பெற்ற இன்பம்

பெறுக இவ் வையகம்".

என்ற உயர்ந்த நோக்கில் அவர்கள் விடுத்த வேண்டுகோளுக்கு இணங்க பகவத் ஐயா அவர்கள் 24, 25 தேதிகளில் மீண்டும் ஓர் ஞானமுகாம் நமது ஸ்ரீபகவத் பவனில் நடத்திக் கொடுத்தார்கள்.

இந்த ஞானத் தெளிவை அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தில் செயல்பட்ட புதிய அன்பர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் ஸ்ரீபகவத் ஐயா, அவர்கள் அக்டோபர் மாதம் 15ஆம் தேதி முதல் 24ம் தேதி வரை ஸ்ரீ பகவத் பவனில் தங்கவுள்ளார்கள். இதனை தொடர்ந்து டிசம்பர் மாதத்திலிருந்து இங்கேயே தங்கவுள்ளார்கள் விரும்புபவர்கள் முன்அனுமதி பெற்று ஐயாவை சந்தித்து தெளிவு பெற்றுச் செல்லலாம். இந்த வாய்ப்பினை நீங்களும் பயன்படுத்தி தேடுதல் உள்ள உங்கள் நண்பர்களுக்கும் தெரிவித்து அவர்களும் பயன்பெறச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

நம் வாழ்வின் முக்கிய நோக்கம் விடுதலை. விடுதலைக்கு பிறகே நம் வாழ்வு ஒரு முழுமையான வாழ்வாக அமைகிறது. தேடுதல் கொண்டவர்களுக்கு ஞானத்தெளிவை கொடுத்து அவர்களது மனத்துன்பங்களையும் துயரங்களையும் போக்கவே நாம் அனைவரும் பகவத் பாதையில் பயணத்தை துவங்கி பயணித்துக் கொண்டிருக்கிறோம். நமது பயணம் இந்த உலகத்துக்கே ஒளி கொடுக்கும் வெற்றிப் பயணமாக அமைந்திடும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

எனவே நம்மை நாமே வாழ்த்திக் கொண்டு நன்மைகளை நோக்கி பயணிப்போமாக.

# ஸ்ரீ பகவத் பவன்
# நன்றி அறிவிப்பும் வரவேற்பும்



சேலம் பெரியகவுண்டாபுரத்தில் ஜருகு மலையில் அமைந்துள்ள திருவருட்சோலையில் நமது ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமம் பலரின் பங்களிப்பால் மிகச் சிறப்பாக கட்டிமுடிக்கப்பட்டு தற்போது பயன்பாட்டிற்கு வந்துள்ளது.

இயற்கை எழில் நிறைந்த ஜருகு மலையில் அமைந்துள்ளதால் இந்த இடம் ஞானமுகாம் நடத்துவதற்கும் ஐயாவுடன் தங்கியிருந்து ஞானத்தெளிவு பெற்றுச் செல்வதற்கும் தகுந்த இடமாக அமைந்துள்ளது.

இந்த கட்டடப் பணிக்காக பலர் தங்களது பங்களிப்பை வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனர்களாக (Founders) தங்களை இணைத்துக் கொண்டுள்ளார்கள். இந்தக் கட்டடப் பணி பலரின் பங்களிப்பையும் தாண்டி ரூபாய் இருபது லட்சம் வட்டி இல்லாக் கடனாகவும் பலரிடம் பெறப்பட்டு நிறைவு செய்யப்பட்டுள்ளது. இன்னும் 80 நிறுவனர்கள் (Founders) மட்டுமே தேவைப்படும் இந்நிலையில் தங்களது பங்களிப்பை வழங்கி ஸ்ரீ பகவத் பவன் நிறுவனர்களாகத் தங்களை இணைத்துக் கொண்ட

உயர்திரு. **ராம்லால்,** சென்னை,
உயர்திரு. **நாராயண சுவாமி,** பெங்களூர்,
உயர்திரு. **சதானந்தம்,** திருச்செங்கோடு,
திருமதி. **மா. சதானந்தம்,** திருச்செங்கோடு,
திருமதி. **அபிராமி பூவராகவன்,** தொளசம்பட்டி,

ஆகிய அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். மேலும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் அக்டோபர் 15ஆம் தேதி முதல் 24ம் தேதி வரை மற்றும் டிசம்பர் மாதத்திலிருந்து தொடர்ந்து ஸ்ரீ பகவத் பவனில் தங்கவுள்ளார்கள். அதுசமயம் விருப்பமுள்ளவர்கள் முன் அனுமதி பெற்று ஐயாவை சந்தித்து உரையாடி தெளிவு பெற்றுச் செல்லலாம். இந்த வாய்ப்பினை தாங்களும் பயன்படுத்தி தேடுதல் உள்ள தங்களின் நண்பர்களுக்கும் தெரிவித்து பயன்பெறச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

# பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் “பகவத் பாதை” தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது **"Pathai Missing"** என்று **Type** செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு **SMS** அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/- ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/-**

**ஆயுள் சந்தா – ரூ, 1000/-**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத் தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



# ஜென் கதை

## மன சுதந்திரம்

ஒருவன் நன்றாக கல்வி கற்றான். நல்ல வேலையில் அமர்ந்தான், திருமணம் முடித்தான், குழந்தைகள் பெற்றான், பொருட்களை ஈட்டினான், அனைத்தும் இருந்தும் அவன் நிம்மதியை மட்டும் அடையவில்லை. எப்போதும் மனம் நிறைவின்மையிலும் ஒருவித போராட்ட உணர்விலும் இருப்பதை உணர்ந்தான்.

ஆன்மிகத்தில் ஈடுபட்டால் திருப்தி கிடைக்கும் என்று ஈடுபட்டான். தீவிரம் காட்டினான். பல கேள்விகள் தோன்றின. விடையைத் தேடி அலைந்தான். பல ஆன்மிக தளங்கள் சென்றான். மத நூல்கள் படித்தான். மத குருமார்களின் போதனைகள், ஆன்மிக பயிற்சிகள் என அனைத்தையும் முயற்சி செய்தான். தேடல் மட்டும் நிறைவடைய வில்லை.

இப்படியே காலங்கள் கடந்தன. ஒரு கிராமத்தில் ஞானி ஒருவர் விவசாயம் செய்து கொண்டு குடும்பத்துடன் வாழ்ந்து வந்தார், அவரை சந்தித்தான்.

ஞானி அவனை வரவேற்று; ‘பயண களைப்பு நீங்கி உணவருந்தி ஓய்வு எடுத்து கொண்ட பிறகு நிதானமாக உரையாடுவோம்.’ என்று கூறி தன்னுடைய பணியை செய்யத் தொடங்கினார்.

மாலை இருவரும் ஒன்றாக அமர்ந்தனர். சில நிமிடங்கள் மௌனமாக நகர்ந்தன. “என்னை சந்திக்க வந்ததின் நோக்கம் என்ன?” என்றார் ஞானி. “எனது தேடலுக்கு உங்களிடம் பதில் இருக்குமா?” என்று அறிந்து கொள்ள என்றான்.

“தெரிந்ததை தேடுகிறீர்களா? தெரியாததை தேடுகிறீர்களா?” என்றார் ஞானி.

“குடும்பஸ்தன் குழம்பினான். தெரிந்தது, தெரியாதது என்றால் என்ன?” என்றான்.

“நான் எங்கிருந்து வந்தேன், எங்கே போவேன்? பிறப்பு இறப்பு ஏன்? எனது உடல் எப்படி உருவானது? உள்ளுறுப்புகள் தன்னிச்சையாக எப்படி செயல்படுகிறது? பேரண்டம் எப்படி தோன்றியது? எப்படி இயங்குகிறது? அதன் முதலும் முடிவும் என்ன? போன்றவைகள் எனக்கு தெரியாதவைகள்...

“இயற்கை கொடுக்கும் மழையை பயன்படுத்தி மண்ணில் பயிர்களை உற்பத்தி செய்ய தெரியும். என்னை தெரியும். நான் யார் என்பது தெரியும், எனது மனதின் இயக்கம் தெரியும். என்னுடைய எல்லை எது வென்று தெரியும். எனக்கு எது தேவை, எது தேவையில்லை என்பது தெரியும்” என்றார் ஞானி.

"நீங்கள் கடவுள் பற்றி எதுவும் சொல்லவில்லையே. நான் எப்படி கடவுளை அடைவது என்று சொல்லவில்லையே" என்றான்.

"எனக்கு தெரியாது என்று கூறியது எல்லாம் கடவுளின் செயல், கடவுள் அவர் வேலையை செய்கிறார். நான் என் வேலையை செய்கிறேன். நான் ஏன் கடவுளை அடைய வேண்டும்?" எனக் கேட்டார் ஞானி

"உங்களுக்கு தெரிந்தது உங்கள் மனதை பற்றித்தானா? மனம் இல்லாமல் போவதை பற்றி நீங்கள் எதுவும் சொல்லவில்லையே?" என்றான்.

"மனம் ஏன் இல்லாமல் போக வேண்டும். மனம் இருந்தால் தான் நாம் வாழவே முடியும். நீயும், மனதின் ஒரு பகுதி தான், மனதின் அம்சம்தான் நீ" என்றார் ஞானி.

"புரியவில்லையே சாமி" என்றான்.

"நீ சிறுவயதில் இருந்து தெரிந்து கொண்ட அனைத்தும் உன் கல்வி, வேலை, வசதி, இன்பம், துன்பம், கடவுள், மதம், தத்துவம், சித்தாந்தம், வேதாந்தம், ஆன்மிகம் என அனைத்தும் மனதை கொண்டு தானே அறிகிறாய்?" என்றார் ஞானி.

"ஆமாம். மனதை கொண்டு தான் அறிகிறேன் சாமி" என்றான்.

"அனைத்தையும் மனதை கொண்டே அறிகிறாய் என்றால் நீ யார்? நீயும் மனதின் ஓர் அம்சம் தானே. மனம் கணத்திற்கு கணம் தோன்றி மறையும் பிம்பம் தானே" என்றார் ஞானி.

அவன் "அப்படி என்றால் நான் தேடிக்கொண்டிருப்பது மனதின் இயக்கத்தை தானா? மனதின் செயல்பாட்டை தானா?" என்றான்.

"ஆமாம் நீ தெரிந்து கொள்ள வேண்டியது மனதின் சுதந்திரமான இயக்கத்தை தான்" என்றார் ஞானி.

"மன சுதந்திரம் என்றால் என்ன? அதை எப்படி தெரிந்து கொள்வது?" என்றான்.

மனம் அனைத்து விசியங்களையும் அறிகிறது. அறிந்த அனைத்தையும் பதிவு செய்கிறது. பதிவு செய்ததை தேவையான நேரத்தில் அல்லது தேவையற்ற நேரத்தில் வெளிபடுத்திக் கொண்டே இருக்கிறது. மனதிலிருந்து தான் எண்ணம், உணர்வு, சிந்தனை அனுபவம் என வெளிபடுகிறது. இவை அனைத்தையும் அறியும் நான் என்னும் தன்மையிலும் மனமே உள்ளது. மனம் தான் சந்திக்கும் சூழ்நிலைக்கு ஏற்றாற்போல் எண்ணம், உணர்வு, சிந்தனை என ஏதோ ஒன்றை தாமாகவே வெளிபடுத்திக் கொண்டு பிறகு தாமாகவே மறையும் ஒரு சுதந்திரமான இயக்கமாக இயங்கி கொண்டு இருக்கிறது. இப்படி சுதந்திரமாக இயங்கும் மனதின் இயக்கத்தில் இது வேண்டும்... இது வேண்டாம் என நமது அறிவு குறிக்கிடும் போது தான் அது போராட்டமுடைய மனமாக மாறுகிறது. மனம் அதன் போக்கில் சுதந்திரமாக இயங்குவது தான் மனதின் சுதந்திர இயக்கம்" என்றார் ஞானி.

"ஞானம் என்றால் என்ன?" என்றான்.

"மனதின் இந்த சுதந்திரமான இயக்கத்தை புரிந்து கொண்டு அதன்போக்கில் நமது அறிவு குறிக்கிடாமல் இருப்பது தான் ஞானம்" என்றால் ஞானி.

"முக்தி, விடுதலை என்பது என்ன?" என்றான்.

"மனதை அதன் போக்கில் விடுதலையோடு இயங்குவது தான் முக்தி, விடுதலை" என்றார் ஞானி.

"மனதை தூய்மைபடுத்த ஜப, தபங்கள் தேவையில்லையா?" என்றார்.

மனதின் இயக்கத்தை புரிந்து கொண்டால் ஜப, தபங்கள் தேவையில்லை என்றார் ஞானி.

மனம் அதன் போக்கில் இயங்குகிறது, அப்படி தானா? என்றான்.

"ஆமாம், மனதின் செயல்பாடும், படைப்பின் செயல்பாடும் இயற்கை தான். இரண்டையும் இயக்குவது இறைவன் என்ற இயற்கை தான், இயற்கையை நாம் உருவாக்கவில்லை. அது போல் மனதின் இயக்கத்தையும் நாம் உருவாக்கவில்லை." என்றார் ஞானி.

"இதில் என் பங்கு என்ன? நான் எப்படி தான் வாழ வேண்டும்?" என்றான்,

"மனதை பொறுத்த அளவில் அது சுதந்திரமான இயக்கம். நாம் அங்கு செய்வதற்கு எதுவும் இல்லை. ஆனால் மனத்தை தூண்டு கோலாக பயன்படுத்தி புறத் தேவைக்கான செயல்களை செய்யலாம். புறச்செயல் நம் கை வசம் மட்டுமே உள்ளது" என்றார் ஞானி.

வாழ்க்கை என்பது என்ன? என்றான்.

வாழ்வு என்பது ஒரு தொடர் நிகழ்வு. நமது மனம் ஒவ்வொரு கணமும் ஏதோ ஓர் அனுபவத்தை வெளிபடுத்திக் கொண்டே இருக்கும். மனதின் இந்த செயல்பாட்டை நாம் புரிந்து கொள்வதால் நாம் சந்திக்கும் சூழ்நிலைகளையும், அனுபவங்களையும் அப்படியே கிரகித்து அதில் கலந்து கரைந்து சென்று கொண்டே இருப்போம். வாழ்வே ஓர் ஓடிக்கொண்டு இருக்கும் ஆற்றின் இயற்கையான நிகழ்வாக நிகழ்ந்து கொண்டிருக்கும், எல்லா அனுபவமும் ஆற்றை போல ஓடிக் கொண்டே இருக்கும், இதுவே நாம் வாழ வேண்டிய முறை" என்றார் ஞானி.

தேடுதலுக்கு விடை கிடைத்த நிறைவில் விடைபெற்றான் குடும்பஸ்தன்.

Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555